உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஜய - ஐப்பசி - 2014 - அக்டோபர் இதழ் - 28

சிறப்பாசிரியர் :
சீர் வளர் சீர்
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய செளந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ **10.00**
ஆண்டுச் சந்தா ரூ **100.00**

உ
சிவமயம்

# இறை வணக்கம்




## திருநெல்லை துதி

கமலமலர் மேலிருந்து கருஞ்சுரும்பர் இசைபொழியும்
காவிடையில் தென்றலினால் கவின்கொடிகள் தலையசைக்கக்
கடுந்தவம்செய் ஞானியர்தம் காவியுடைகண்டுசிவன்
கண்பார்க்க வாழ்கொற்ற வாளீசர் இடத்தின் பாங்கர்

அமைந்திருக்கும் பெருமாட்டி அம்பிகையாம் திருவாட்டி
அணிபணிகொள் அலங்காரி அம்புயப்பெண் ஓங்காரி
அழகுபொலி மதுரையினை ஆளவந்த மகராணி
அஞ்சனக்கண் திருநெல்லை அவள்பாதப் போது தொட்டு

நமைவளைத்த வினையகல நாள்தொறும் நனிவணங்கி
நாமங்கள் பலகூறி நற்கழனி வாயிலுக்கு
நாள்தோறும் வந்துபணி நல்லடியார் இலந்தேடி
நமக்கென்றே அருள்செய்ய மனம்வைத்த நாய கிக்கே

அமைப்பான வன்னிவனம் அங்கமைந்த திருக்கோயில்
ஆண்டவர்செய் அரியணையில் அமர்சக்தி ஆனவளை
ஆதாரம் நீஎன்றே அன்றாடம் வணங்கிடுவோம்
அவளடிகள் காப்பாக அன்புடனே பணிவோம் யாமே.

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

"தானம் தவம்இரண்டும் தங்கா வியன் உலகம்
வானம் வழங்காது எனின்"

மக்கள் குலம் இந்த மண்ணிலே வாழ்வதற்கும், உயர்வதற்கும் அடிப்படையிலான இரண்டு செயல்களைத் திருவள்ளுவர் - தானம், தவம் என்று குறிப்பிடுகின்றார். வான், மழை பெய்யாது ஒழிந்தால் இவை இரண்டும் நடைபெறாது என்று வான் சிறப்பைப் பேசுகிறார்.

ஆன்மீகத் துறையிலும் மேலே சொன்ன இரண்டு செயல்களும் மிக இன்றியமையாதவை. தவம் என்பது தன்னை நெறிப்படுத்திக் கொண்டு முறைப்படி வாழ்ந்து உயர்வதற்கு வழி செய்யக்கூடிய செயல்.

தானம் என்பது பிறரையும் தம்மைப்போல் கருதி அவர்களும் வாழ்ந்து உயர அளிக்கின்ற உதவிகள்.

மனிதன் சுயநலத்தை ஒதுக்கிப் பிறருக்குப் பொருளாலும், உழைப்பாலும், சொல்லாலும் உதவிகளைச் செய்தல் அவசியம். அப்போதுதான் எல்லா உயிர்களும் நலமுடன் வாழ இயலும்.

தானம் செய்வதிலே பல வகை உண்டு. முதல் வகை தன்னிடத்திலே உள்ள பொருள், உழைப்பு, திறமை முதலியவற்றைத் தனக்கு வேண்டியது போக எஞ்சியதை அவை வேண்டுவோருக்கு அளிப்பது. இந்த வகைத் தானத்தை மக்கள் எல்லோரும் கடைப்பிடித்தால் ஏற்றத் தாழ்வுகளை நீக்கி எல்லோரும் சமம் என்ற நிலை எய்த முடியும். ஆனால் இது நடைபெறக் கூடிய காரியமல்ல.

எனவே தாங்கள் விரும்பிய அளவிலே பொருள்தானம், உழைப்புத்தானம் செய்தல் வேண்டும். தற்போதைய

சூழ்நிலையிலே நடைபெறுகின்ற தானதர்மங்கள் ஏதேனும் ஒரு தன்னல நோக்கம் கருதியே செய்யப்படுகின்றன. புகழ் வேண்டியோ, புண்ணியம் வேண்டியோ, பாவங்களுக்குப் பரிகாரமாகவோ அன்றி வேறு சில கட்டாயங்களுக்காகவோ தானங்கள் செய்யப் படுகின்றன. அப்படி இல்லாமல் தன்னல நோக்கங்கள் இல்லாமல் சிறிய அளவிலே தானங்கள் செய்யப்படுகின்ற பொழுது மனதிற்கு ஒரு மகிழ்ச்சி கிடைப்பதை அறியலாம். இந்த மகிழ்ச்சி தொடர்ந்து சுய நல நோக்கமின்றி வேண்டுவோருக்கு அளிப்பதற்கு மேலும் மேலும் செய்பவர்களே இதனை உணர முடியும்.

தானதர்மங்கள் செய்தவர்கள் குடியும், குலமும் தலைமுறை தலைமுறையாக வளம் பெறும் என்பது பெரியவர்களுடைய அனுபவ வாக்கு.

நல்ல காரியங்களுக்குச் செய்கின்ற பொருள் தானம், சிரம தானம் இறைவனுக்குச் செய்கின்ற தொண்டே. பாரதி சொல்வது போல்.

அனைவரும் இயன்ற அளவு தானம் செய்யத் தொடங்குவோமாக!

தற்போதைய வாழ்க்கை முறைகளிலே ரத்த தானமும், உடல் தானமும், உறுப்புத் தானமும் மிகவும் இன்றியமையாதவையாக உள்ளன.

காலங்காலமாக அன்னம் பாலிப்பது மிகச் சிறந்த தானமாகக் கருதப்படுகின்றது. அதோடு கல்விதானம், அறிவு தானம் ஆகியவற்றோடு மேலே சொன்ன தானங்கள் அனைத்தையும் அவரவர் வசதி வாய்ப்புக்கேற்பச் செய்து உண்மையான மகிழ்வையும், இறைவன் அருளையும் பெற முயலுவோமாக!

*ஸ்ரீ சற்குருநாதன் துணை.*

தவத்திரு குமார தேவர் அருளிய

## மகாராஜா துறவு (தொடர்ச்சி)

### விருத்தாம்பிகை துதி

இருள்கலி வலியின் ஞானநல் நெறிகள்
இறந்துஉயிர் கொடுநெறி மேவி
மருள்கொடு கலங்கா வகைகலி என்றும்
வந்துஅணு காப்பதி தன்னில்
தெருள்சக்தி கருணை உருவதாய் நின்று
தெளிவிக்கும் இறைவி எம்குருஓர்
அருள்கடல் பெரிய நாயகி உலகக்கு
அனைமுதல் வியைப்பணிந் திடுவாம்.

அஞ்ஞான மயக்கம் பொருந்திய கலிகாலத்தின் வலிமையினாலே, நன்மை தரும் ஞான நெறிகள் அழிந்து, ஆன்மாக்கள் தீய வழிகளில் சென்று மயக்கம் கொண்டு கலங்காதபடி கேடு எக்காலத்திலும் வந்து சேராத பதியான விருத்தாசலத்தில், ஞான சத்தியாகவும், கருணை வடிவு ஆகவும் நிலை பெற்று உயிர்களின் மயக்கம் தெளியச் செய்யும் இறைவியும், எம்முடைய ஞானாசிரியரால் அறியப் பட்ட கருணைக் கடலும், உலகிற்கு அன்னையும், முதல்வியும் ஆன பெரிய நாயகியை வணங்குவோம்.

### சபாநாயகர் துதி

திங்கள்ஆர் சடையில் கங்கைநீர் துளிப்பத்
திருந்துஇழை உமைஉளம் களிப்பப்
பொங்குஅரா வொடுநல் புலிமுனிவர் கள்மால்
போதுஅயன் அமரர்கள் போற்றத்
துங்கநான் மறைகள் துதித்திட ஐந்து
தொழில்விரிந் திடபொது அதனில்
செங்கழல் அதிர நடம்செயும் பொருளைத்
தினம்பணிந்து இடர்ஒழிந் திடுவாம்.

நிலவு பொருந்திய சடையில் கங்கை நீர் ததும்பித் துளிக்க, அழகுடன் செய்த அணிகளை அணிந்த உமாதேவி மனம் மகிழ, பாம்பின் உடல் படைத்த பதஞ்சலியோடு புலிக்கால் முனிவராம் வியாக்கிர பாதரும் பிற முனிவர்களும், திருமாலும், தாமரையில் தோன்றிய நான்முகனும், தேவர்களும் போற்றி வணங்க உயர்ந்த நான்கு வேதங்களும் பாடிப் பரவ, ஐந்தொழில் எங்கும் பரவிட, சிவந்த பாதங்கள் ஒலி செய்ய, பொன்னம்பலத்தில் நடனம் செய்கின்ற மெய்ப்பொருள் ஆகிய சபாபதியை நாள்தோறும் வணங்கித் துயர் நீங்குவோம்.

## சிவகாமி அம்மை துதி

அருள்உருவாய் உயிர்கள்தமக்கு அன்னை ஆகி
அஞ்ஞானம் தனைஅகற்றி அமலம் ஆகி
மருள்இலதாய் மெய்ஞ்ஞானம் ஆகும் முத்தி
வாய்த்திடவே காத்துஅருளி வானோர் ஏத்த
இருள்கெடவே மிளிரும்இரும் கழல்கள் ஆர்ப்ப
இறைபுரியும் திருநடத்தால் களித்து வாழும்
தெருள்மருவு மறைநான்கும் பரவும் தில்லைச்
சிவகாம சுந்தரியைச் சிந்தை செய்வாம்.

கருணை வடிவாகி, உலக உயிர்களுக்கு எல்லாம் தாயாகி, அஞ்ஞானத்தை அகற்றி, தூய்மையே வடிவாகி, மயக்கம் இல்லாத காட்சியாகி, மெய்ஞ்ஞானம் ஆகிய பேரின்ப வீடு கிடைத்திட அடியவர்களைக் காத்து, அவர்களுக்கு அருள் செய்யும் அன்னை, தேவர்கள் துதிக்கவும், அஞ்ஞான இருள் நீங்கவும் ஒளிவிடும் பெரிய வீரக்கழல்கள் ஒலி செய்ய, எப்பொருட்கும் இறைவன் ஆகிய சிவபெருமான் செய்யும் அழகிய திருநடம் கண்டு களிக்கும் நாயகி, நிலைத்து வாழும் தெளிவான நான்கு வேதங்களும் துதிக்கின்ற, தில்லையில் எழுந்தருளி உள்ள சிவகாம சுந்தரியை மனத்தால் சிந்தித்து வணங்குவோம்.

### விநாயகர் துதி

செக்கர் போல்ஒளிர் முக்கண் சிலம்பினை
மிக்க பேர்அருள் வேலையை ஓர்கொம்பால்
தக்க அன்பர்க்கு உதவும் தருவினை
இக்க தைநிறை வேற இறைஞ்சுவாம்.

இக்கதை நிறைவுபெற, செவ்வானம் போல ஒளிவிடும் மூன்று கண்களை உடைய மலையினை, மிகுந்த பேரருட் கடலை, ஒற்றைக் கொம்பினால் தகுந்த உதவி செய்யும் கற்பக மரமான விநாயகக் கடவுளை வணங்குவோம்.

### சுப்பிரமணியர் துதி

கடிகமழ் கரிய கூந்தல்
கனிமொழி துவர்வாய்த் தெய்வப்
பிடிதனக் கோட்டால் வள்ளிப்
பெண்கொடி படரும் செய்ய
படிபுகழ் புயமாம் குன்றில்
பாயவண் கழுநீர் நீபம்
மடல்அவிழ் செழுந்தார்ச் செவ்வேள்
மலர்அடி வணக்கம்செய்வாம்.

வள்ளி என்ற பூங்கொடியானது படர்கின்ற, உலகில் உள்ளோர் கொண்டாடும் சிவந்த தோள்களாகிய குன்றில், மணம் கமழ்கின்ற கரிய கூந்தலையும், தீங்கனி போன்ற சொல்லையும், பவளம் போன்ற வாயையும் உடைய தெய்வப் பெண் யானையானது தனங்களாகிய தந்தங்களால் மோதிட, அதனாலே இதழ்கள் விரிந்த செங்கழு நீர், கடம்பு ஆகியவற்றால் தொடுக்கப் பட்ட மாலை அணிந்த முருகக் கடவுளின் தாமரை மலர் போன்ற பாதங்களை வணங்குவோம்.

### அடியார் துதி

வண்துழாய் அலங்கல் மாயவன் மலர்மேல்
வதிந்தநான் முகன்மறை அறியா
தொண்டைவாய்க் கெண்டை விழிக்கழை மொழிஒண்
துடிஇடை உமையைஓர் இடத்தில்

கொண்டகோன் அருளைப் பொருள்எனக் கருதிக்
குலவிய சாதனம் தரித்து
மண்டிய அடியார் யாவர்மற்று அவர்தாள்
மனத்தினும் சிரத்தினும் வைப்போம்.

வளமான துளசி மாலை அணிந்த திருமாலும், தாமரை மலர்மேல் இருக்கின்ற நான்முகனும், வேதங்களும் தேடி அறிய முடியாதவனும், கொவ்வைக் கனிபோன்ற வாயும், சேல்மீன் போன்ற கண்ணும், கரும்பு போன்ற மொழியும், ஒளியுடன் கூடிய உடுக்கை போன்ற இடையும் உடைய உமா தேவியை இடப்பக்கம் சேர்த்து அருளிய இறைவனும் ஆகிய சிவபெருமானின் அருளே பொருள் என நினைத்து விளங்கும் சமய சாதனங்களோடு சிவச் சின்னங்களையும் தாங்கி, ஈசனிடம் அன்பு பெருகிய அடியவர்கள் எவரோ, அவருடைய பாதங்களை உள்ளத்திலும், தலையிலும் வைத்து வணங்குவோம்.

### அவையடக்கம்

சகரர்தம் வலியையும் தடம்தி ரைக்கடல்
அகலமும் பின்புஉளோர் அகழ்இ லஞ்சிதான்
புகழ்உற விளக்கலே போல இச்செயுள்
தகைதரு கலைஞர் நூல்தனை விளக்குமால்.

பெரிய அலைகள் வீசுகின்ற சமுத்திரத்தைத் தோண்டிய சகரர் வலிமையை, பெரிய அலைகளை உடைய கடல் விளக்குவதுபோல, பின்பு உள்ளவர் தோண்டிய குளமும் அதை அழகுற விளக்குவதைப்போல, தகுதிமிக்க கலைஞர் எழுதிய நூல்களின் பெருமையை இந்நூல் விளக்கும்.

### பாயிரம்

திங்கள்ஒண் கவிகைத் திகிரிஅம் திணிதோள்
திகழ்கடல் தானைமா ராஜன்
அம்கண்மா நிலத்தில் துறந்துவீடு அடைந்த
அரியஇக் காதையைத் தமிழால்

இங்குமா தவத்தோர் இசையும்என்று இசைப்ப
இசைத்தனன் வீடுஉறக் கேட்டோர்
கொங்குஅவிழ் பொழில்சூழ் பழமலை உறையும்
குமாரதேவு என்னும்மா முனியே.

முழுநிலவு போன்ற ஒளி பொருந்திய வெற்றிக் குடையுடன், ஆணைச் சக்கரத்தையும் அழகுடன் வலிமை பொருந்திய தோள்களையும், பரந்த கடல் போன்ற படைகளையும் கொண்ட மா மன்னன், அழகிய இவ்வுலகத்தில் தன் அரசாட்சியினை விட்டு வீட்டுலகை அடைந்த அருமையான இக்காதையைத் தவ முனிவர்களும், தமிழ் நாட்டிற்காகத் தமிழ்ச் செய்யுள்களாலே சொல்க என்று கூற, நறுமணம் கமழ்கின்ற சோலை சூழ்ந்த பழமலை என்னும் விருத்தாசலத்தில் தங்கிய குமாரதேவர் என்ற சிறந்த முனிவர், இதனைக் கேட்டோர் வீடுபேறு அடையுமாறு கூறினார்.

### பாயிரம் கூறியவரால் இயற்றப்பட்ட வாழ்த்து

சிவன் திரு உருவாம் ஐந்து
சின்மய எழுத்தும் வாழி
நவம்தரு நீரும் வாழி
நயனநன் மணியும் வாழி
கவின்தரும் குமார தேவன்
கழல்இணை இரண்டும் வாழி
அவன்திரு அடியார் தம்மோடு
ஆருயிர் அனைத்தும் வாழி.

சிவபெருமானின் திருவடிவான ஞானத்தை நல்கும், ஐந்து எழுத்தும் வாழ்க. தூய்மை தரும் திருநீரும் வாழ்க. நல்ல உருத்திராக்கமும் வாழ்க. அழகு தரும் குமார தேவனுடைய இரண்டு திருவடிகளும் வாழ்க. அவனை வணங்கும் அடியார்களும் அனைத்து உயிர்களும் வாழ்க.

*(தொடரும்...)*

## அமர்நீதி நாயனாரின் அரன்சேவை (தொடர்ச்சி)

(புலவர் ஆறு.மெ. மெய்யாண்டவன், துணைப்பேராசிரியர், நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி, கோவிலூர்)

**பேணும் அன்பரை நோக்கி நீர்பெருகிய அடியார்க்கு**
**ஊணும் மேன்மையில் ஊட்டிநற் கந்தை, கீள் உடைகள்**
**யாணர் வெண்கிழிக்கோவணம் ஈதல் கேட்டும்மைக்**
**காணவந்தனம் என்றனன் கண்ணுதற் கரந்தோன்**

என மேலே அமர்நீதி நாயனாரிடம் சிவன் உரைத்த செய்தியைச் சேக்கிழார் குறிப்பிடும் அழகே அழகு.

சுவாமி இத்திருமடத்தில் தங்களைப் போன்ற தவமுடைய அந்தணரும் துறவியரும் இங்கே உணவு உண்ணத்தக்க வகையில் வேதியர்களைக் கொண்டு தூய்மையான உணவு ஆயத்தம் செய்து உபசரிக்கிறோம், ஆதலின் தேவரீர் இன்று இவ்விடத்தில் அமுது செய்தருள வேண்டுகிறோம் எனச் சிவனடியாரை அமர்நீதி நாயனார் வேண்டினார். வணங்கம் அமர்நீதிநாயனாரை நோக்கிச் சிவனடியாராக வந்துள்ள சிவன் நன்று மகிழ்ச்சி நான் காவிரியில் நீராடிவிட்டு வருகிறேன். ஒருக்கால் மழை வரினும் வரும் எனவே காய்ந்த கோவணம் ஒன்றைத் தருகிறேன், பத்திரமாய் வைத்திருந்து தாரும் என வெண்மையான கோவணம் ஒன்றைத் தம் தண்டினிலிருந்து அவிழ்த்துக் கொடுத்துவிட்டுச் சென்றார், அத்தோடு இக்கோவணத்தின் பெருமையை நான் சொல்ல வேண்டுவதில்லை. நான் வரும் வரை இகழ்ச்சியாய்க்கருதாது பத்திரமாய் வைத்திருந்து நான் குளித்து வந்ததும் தருக எனக் கோவணத்தின் பெருமைகளை நன்கு கூறி விட்டுக் குளிக்கச் சென்றார். அமர்நீதி நாயனார் பத்திரமாய்த் தனியிடத்தில் வைத்திருப்பேன், குளித்து விட்டுத் தாங்கள் வாருங்கள் எனக் கூறிவிட்டுக் கொடுத்த கோவணத்தைக் கையில் வாங்கிய ஒப்பற்ற தொண்டர் அமர்நீதி நாயனார் மற்ற அடியார் கோவண ஆடைகளோடு வைக்காது ஒருதனி இடத்தில் பாதுகாப்பாகவைத்தார். மறையவராய் வந்த மகாதேவன் அமர்நீதி நாயனார் பத்திரமாய் வைத்திருந்த கோவணத்தை மறைத்து விட்டார்.

சென்ற சிவபெருமான் காவிரியில் நீர் ஆடினாரோ, கங்கையில் நீராடினாரோ என்று சொல்லுமாறு மழையில் நனைந்து நடுங்கிக் கொண்டே வந்தார். அவருக்காக அறுசுவை உண்டி ஆக்கிவைத்திருந்த அமர் நீதி நாயனார் எதிர்சென்று வணங்கி உணவு உண்ண எழுந்தருளுமாறு வேண்டினார். அன்பரோ தாம் நினைத்தது போலவே மழையில் நன்றாக நனைந்து வந்துசேர்ந்தார், ஏற்கனவே கொடுத்து வைத்திருந்த கோவணத்தைக் கொண்டு வாரும் எனச் சிவபிரான் வேண்ட அமர்நீதி நாயனார் கோவணத்தை எடுக்கச் சென்றார். கோவணத்தைக் காணவில்லை, செய்வதறியாது திகைத்து நின்றார்; காற்றினும் வேகமாய் அவர் உள்ளம் சுழன்றது, மனைவி மக்களை விசாரித்து எங்கும் இல்லை என்பதை அறிந்து எம்பிரானை அடைந்தார். ஐயனே தாங்கள் கொடுத்த கௌ பீனத்தைப் பத்திரமாய்த் தனி இடத்தில் வைத்திருந்தேன். எப்படிக் காணாமல் போனது என்பது புரியவில்லை, பொறுத்தருள்க என்றார். வேறு நல்லதோர் கோவணம் விரும்பி முன்கொணர்ந்தேன், கீறு கோவணம் அன்று; நெய்தமைத்தது கிளர்கொள் நீறு சாத்திய நெற்றியீர்; மற்றது களைந்து மாறு சாத்தி என்பிழை பொறுப்பீர் என வணங்கத் திரிபுரம் எரித்த விரிசடைக்கடவுள் ஆகிய அடியவர் வெகுண்டார், நன்றாக இருக்கிறது உன் செயல். உன்னிடம் கோவணம் கொடுத்து நீண்ட நாள்கள் ஆகவில்லை. இன்றுதான் கொடுத்தேன். அடியார்க்கு நல்ல கோவணம் தருவதாகக் கூறி நீ நடித்து உண்மையில் கோவணம் கவர்கள்வனாய் உள்ளாய் போலும்! அழகாய் உள்ளது உன் வியாபாரம் என்றார்.

சிவபிரான் சினம்கண்டு சிந்தை நொந்தார் அமர்நீதி நாயனார் அவர் புலன்களும் பொறிகளும் நடுங்கின. எம்பிரான் திருவடியில் பன்முறை வீழ்ந்து வணங்கி மன்னிப்புக்கேட்டார். சிறிது சினம் தணிந்தார் போலச் சிவபிரான் அமர்நீதி நாயனாரிடம், அன்பனே நீ தருவதாய்க் கூறும் பொன் பொருள் எதுவும் வேண்டா? பிரம்மச்சாரியாகிய எனக்கு இவை தேவை இல்லை. உன்னிடம் கொடுத்த கோவணத்துக்கு ஈடான கோவணத்தை இதோ தண்டில் கட்டிக் கொணர்ந்துள்ளேன். இதனைத்துலாக் கோலில் வைத்து இதன்

எடைக்குச் சமமாக ஒரு கோவணத்தைத் தந்தால் போதும் எனத்தான் கொண்டுவந்த கோவணத்தைக் கொடுத்தார். அமர்நீதி நாயனார் வணிகர். (நகரத்தார்) பொருள்களைத் தராசில் நிறுத்து வாணிபம் புரிபவர். எனவே, அத்துலாக்கோலைக் கொண்டே அமர்நீதி நாயனார்க்கு அருள் பாலிக்க எண்ணினார் அரனாகிய சிவபிரான்.

துலாக்கோல் அங்கே நிறுவப் பெற்றது. மறை கூறிய வாயினன் ஆகிய சிவபிரான் ஒரு தட்டில் தம் கோவணத்தை இட்டார். அதற்குச் சமமாக அமர்நீதி நாயனார நன்கு நெய்யப் பெற்ற கோவணத்தை வைத்தார். எடை சமமாகவில்லை. இறையவன் கோவணத்தட்டு மிகு எடையால் கீழே தாழ்ந்தது; நாயனார் கோவணம் இட்ட தட்டு மேலேறியது. அடியவர்க்குக் கொடுக்க எண்ணிய கோவணங்கள் அனைத்தையும் ஒவ்வொன்றாய் அமர்நீதி நாயனார் இட்டும் அவர் பக்கத்தராசுத் தட்டுத் தாழவில்லை. இறைவனோ கண்டும் காணாது தியானத்தில் ஆழ்ந்திருப்பவர் போல் நடித்தார். அமர்நீதியார் தமக்குரிய தராசுத்தட்டில் வெண்மையான ஆடைகள், பட்டாடைகள், சிறந்த பீதாம்பரங்கள் எண்ணிலாதன இட்டார். நாயனார் பக்கத்தட்டு மேலே போய்க்கொண்டிருந்தது.

இறையனார்க்குரிய தட்டு தாழ்ந்து கொண்டே வந்தது. நாயனார் ஒன்றும் புரியாமல் இருந்தார். அதற்குச் சேக்கிழார் பெருமான் ஒரு காரணத்தைக் கீழ் வரும் பாட்டில் விளக்கியுள்ளார். அப்பாடலைக்காண்போம்.

**முட்டில் அன்பர்தம் அன்பிடும் தட்டுக்கு முதல்வர்**
**மட்டுநின்ற தட்டருளொடும் தாழ்வுறும் வழக்கால்**
**பட்டொடும்துகில் அநேக கோடிகளிடும் பத்தர்**
**தட்டுமேற்படத் தாழ்ந்தது கோவணத்தட்டு**

அன்பு விரிவானால் அதுவே அருள். அதனால்தான் வள்ளுவர் அருள் எனும் குழந்தை அன்பு எனும் அன்னையால் ஈன்றெடுக்கப் பட்டது. எனவே அன்புவைத்த இடத்தில் அருள் உண்டாகும். குழந்தையின் மீது அன்பும் அருளும் கொண்டார். அப்பா உன்மேல் ஏறிக்கொள்கிறேன்

எனக் கூறும் குழந்தை. அப்போது தந்தைதானே தாழ வேண்டும். அது போல அடியவர் அன்புக்கு இறைவன் அருள்தாழும். அன்பு மேலிட மேலிட அருள் தாழ்ந்து கொண்டே செல்லும். இதனை இறைவர் இச்செயல் மூலம் அறிவிக்கிற அழகும், சேக்கிழார் பெருமான் கூறும் சொல்லழகும் மிகமிக மேலே குறிப்பிட்ட பாடலில் காணலாம்.

அமர்நீதி நாயனார் மேலும் பொன் பொருள் வைக்க இறைவனாகிய அடியாரிடம் அனுமதி கேட்டார். இவையெல்லாம் எனக்கு உதவுமா? இனிவேறு என்ன சொல்ல இருக்கிறது. உனது விருப்பம் போல் செய்க எனச் சிவபிரான் அருளுரை நல்கினார்,

அமர்நீதி நாயனாரும் நல்லசெம்பொன்னும், வெள்ளியும், நவமணித்திரளும் உலோகப் பொருள்களும் வேறு பல பொருள்களையும் தராசில் இட்டும், அமர்நீதி நாயனாருக்குரிய தராசுத் தட்டு சமமாகவில்லை இதனைச் சுற்றி நின்றவர் பார்த்து வியந்தனர், அச்செய்தியைச் சேக்கிழார் கூறும் திறம் இதோ,

**தவநிறைந்த நான்மறைப்பொருள் நூல்களாற் சமைந்த**
**சிவன் விரும்பிய கோவணம் இடும் செழுந்தட்டுக்(கு)**
**அவனி மேல் அமர்நீதியார் தனமெலாம் அன்றிப்**
**புவனம் யாவையும் நேர்நிலா என்பது புகழோ**

என்பது அப்பாடல். ஆசை யென்னும் சங்கிலியின் நுனியில் இருக்கிறான் இறைவன், ஒவ்வொரு பொருளின் மீதும் ஆசையை நீக்கி விட்டால் இறைவன் நேரில் வருவார் இதனையே

"ஆசா நிகளம் துகளாயின பின் பேசா அனு பூதி பிறந்ததுவே"

எனக் கந்தரனுபூதியில் அருணகிரி நாதர் குறிப்பிடுகிறார். தன்னை மறந்து இறைபக்தியில் மூழ்கினால் அவர் திருவடிகளை நாம் காணலாம். யானாகிய என்னை விழுங்கி வெறும் தானாய் நிற்கும் இறைவனை வணங்க வேண்டும் என்பதை வலியுறுத்த அமர்நீதி நாயனார், அவர்தம் துணைவியார், மைந்தர் மூவரும் தராசுத்தட்டில் ஏறினர், இருதட்டுகளும் சமநிலை அடைந்தன. அப்படி ஏறும் போது அமர்நீதி நாயனார்

இழைத்த அன்பினில் இறைதிருநீற்று மெய்யடிமை
பிழைத்திலோ மெனில் பெருந்துலை நேர் நிற்க என்று
மழைத் தடம்பொழில் திருநல்லூர் இறைவரை வணங்கித்
தழைத்த அஞ் செழுத்தோதினார் ஏறினார் தட்டில்

அதாவது இடையறாது சிந்திக்கும் அன்பாகிய பக்தியும் திருநீறுபூசிய மெய்யடியார்க்கு அடிமையா யிருந்தது மெய்யானால் தராசுத்தட்டுகள் சமநிலை அடையட்டும் எனக்கூறி அமர்நீதி தம் இல்லத்தாருடன் ஏறினார்; துலாக்கோல் சமநிலையுற்றது. இதன் மூலம் இறைவன் கோவணமும் அமர்நீதி நாயனார் மெய்யடிமையான இறைப்பற்றும் உண்மையே என அமர்நீதி நாயனார் புராணம் நமக்கு விளக்குகிறது. தேவர்கள் அமர்நீதி நாயனார் பெருமையை வியந்து பூமழை பொழிந்தனர். இறைவன் விடைமேல் ஏறி அமர்நீதி நாயனார்க்குக் காட்சி கொடுத்தார். அமர்நீதி துலாக்கோலுடனேயே சிவனடி சேர்ந்தார். இச்செய்தியைச் சேக்கிழார் வாக்கால் அறிவோம்.

நாதர் தம் திருவருளினால் நற்பெருந்துலையே
மீது கொண்டெழு விமானமதாகி மேற்செல்லக்
கோதில் அன்பரும் குடும்பமும் குறைவறக்கொடுத்த
ஆதி மூர்த்தியாருடன் சிவபுரி அடைந்தார்

மேற்கூறிய செய்திகளால் அமர்நீதி நாயனாரின் மாசற்ற பக்தியை, சிவபெருமான் வெளியுலகிற்கு வெளிப்படுத்தினார்.

தன்னை மறந்தாள் தன்நாமம் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கைதலைவன் தாளே

என அப்பர் கூறிய பதிகம் இங்கே நினைவு கூரத்தக்கது. நிலைபெற்ற நீதிமான் அமர்நீதி நாயனார் என்பதையும் அவர்தம் மாசற்றபக்தியையும் உணர்ந்து மகிழ்வோம்.

## ஞான வாசிட்டக் கதைகளும் தத்துவமும் (தொடர்ச்சி)

(சாது மெய்யப்ப ராமசுவாமி, கோவிலூர் மடாலயம்)

### III/01/05 : லீலை – (மாயா மண்டப) கதை

( முற்குறிப்பு : வாசிட்டக் கதைகள் அனைத்திலும் இதுவே மிகவும் சிக்கலானது எனப்படுகிறது. மாயையின் ஆற்றல் எத்தகையது என்பதை உணர்த்தவும், நுண்ணுடல் மட்டும் பெற்ற (நம்போல் பருவுடலற்ற) ஒருவர், அவர்தம் அக உணர்வில் (ஞான திருஷ்டி) என்னவெல்லாம் செய்யவும், அறியவும் கூடும் என்பனவற்றை, நம் போன்ற, பருவுடலுடன் கூடியவர்கள் அறிந்து கொள்ள வேண்டியும் இக்கதை கூறப்படுகிறது.)

**கதைப்பகுதி:** பதுமன் எனும் பெயர் கொண்ட ஒரு நல்ல அரசன் இருந்தான். அவனது அரசி, லீலை ஆவாள். அவள், மிகுந்த நற்குணங்களுடன் பதுமன் மீது பற்றுடையவளாயும் வாழ்ந்தாள். மறையோர்களை அணுகி, தன் கணவர் இறவாதிருக்கத் தேவையான ஜபம், தவம் போன்ற வழிகள் பற்றிக் கேட்டாள். அவர்களோ, ஜபதவங்கள் புண்ணியமும், சித்தியும் தரலாமாயினும், இறப்பு என்பதைத் தவிர்க்க வல்லன அல்ல எனக் கூறினர். லீலை, சரசுவதி தேவியை நோக்கித் தவமிருந்தாள். அவளுக்குத் தேவியின் நற்காட்சி கிட்டியது. தன் கணவர் இறப்பினும், அவர் உயிர், உடலை விட்டு நீங்காதிருக்கவும், தான் வேண்டிய போதெல்லாம் தேவியின் நற்காட்சி கிட்ட வேண்டுமெனவும் வரம் கேட்டுப் பெற்றாள்.

பல ஆண்டுகள் கழிந்த பின்னர், முதுமையுற்ற மன்னவன் இறந்தான். லீலை, தேவியை வேண்ட, தேவியின் நற்காட்சி கிட்டியது. தன் கணவர் அரண்மனை விட்டு அகலக் கூடாது என மறுபடியும் வேண்டினாள். தேவியும்,

"மாய்வுற்ற வேந்தை மலரான் மறைவித்து வைப்பாய்
ஏய்வுற்ற பூஉட ராமெய் அழியாது சீவன்
பாய்வுற்று அக லாதுபொன் மண்டபம் பற்றி நிற்கும்
தோய்வுற்று இவன் தோள்விரைவிற் துயர்தீர்தி" என்றாள்

தேவி கூறியபடி செய்த பின்னரும் லீலையின் துயர் தீரவில்லை. மறுபடியும் தேவியை வேண்டினாள். அவ்வாறே தோன்றிய தேவியிடம் தன் கணவர் தற்போது எங்குள்ளாரோ, அங்கு தன்னையும் சேர்த்து விடுமாறு வேண்டினாள். அதற்குத் தேவியும், அவள் கணவர், வேற்று வானத்தைச் சேர்ந்த ஒரு கோளில் உள்ளதாயும் அவரைக் காண, லீலை சமாதி நிலை பெற்று, இந்த உலகமும் அனுபவங்களும் பொய் என உணர வேண்டும் எனவும் கூறினாள். லீலை, அத்தகைய நிலையை வேண்ட, அவளுக்கு நிர்விகற்ப சமாதி நிலை அருளப்பட்டது. இத்தகைய நிலையில், லீலையால், வானங்களை விரைவில் கடக்கவும், வெவ்வேறு கோள்களை அடையவும் இயன்றது. இவ்வாறு பயணித்த லீலை, வேற்று வானத்தில், ஒரு பெரிய நாட்டில், நால் வகைச் சேனைகள் சூழ, பதினாறு வயதுடைய மன்னவன், விதூரதனாகத் தன் கணவனைக் கண்டாள். ஆனால் அவளை யாரும் காண இயலவில்லை. லீலை, தனது அரண்மனை அடைந்து, முற்கூறிய சமாதிநிலை நீங்கினாள். எந்த மன்னன் உண்மை என அறிய, மறுபடியும் லீலை தேவியின் காட்சி வேண்டினாள். அங்குத் தோன்றிய தேவியிடம்,

**"பந்தமுறு மயக்கமே வடிவாய் நிற்கப் பழையபடி பிறப்புற்ற படியின்**
**இந்தஉலகுறு மயக்கம் போகச்சொல்வாய் என லீலை கேட்டலுமே**
**-இறைவி சொல்வாள்"**

"விதூரதன், பதுமனின் மறுபிறப்பாவான். ஆனால் பதுமனின் பிறப்பு அவனுக்கு முதலாவதல்ல. பதுமன், இதற்குமுன், ஞானவானின் வேறோர் பகுதியில், பல புத்திரர் சூழ, அருந்ததி எனும் மனைவியுடன், ஓர் மறையவனாக வாழ்ந்தான். அவன் பெயர் வசிட்டன். ஓர் மன்னவனின் வாழ்க்கையைக் கண்ணுற்ற மறையவன், அத்தகைய வாழ்வு தனக்கும் கிட்டாதா என விரும்பி, அதே ஆசையோடு இறந்தான். அவன் மனைவியும் இறந்தாள். இருவரும் இறந்து, (அவர்களது அண்டத்தில்) எட்டு நாட்களாகிறது. அவர்களின் மறு பிறப்பே, பதுமனும் லீலையும் ஆகும்" என்றாள்.

"தேவியின் வாக்கு உலகியலுக்கு ஏற்புடையதாக இல்லை.

வேற்று அண்டத்தோர் நம் உலகிற்கு வருதல் இயலக்கூடியதா" எனக்கேட்ட லீலையிடம், தேவியும்,"நியதியின் உண்மையே கூறப்பட்டது. மறையவன் உயிர் அங்கேயே உள்ளது. உன் அரசும் செல்வமும் தான் பொய்யாகும். எம்மைப் போன்றோருக்கு இதில் வியப்பில்லை. ஆனால் புவியில் பருவுடல் பெற்றோர் இதனை வேறுபாடாகக் காணலாம்" எனக் கூறினாள். "மறையவன் இறந்து எட்டு நாளில், அவன் மறு பிறப்புக்கு (பதுமன்) பல ஆண்டுகள் கடந்தது எவ்வாறு" எனக் கேட்ட லீலைக்கு, தேவி கூறியதாவது, "மனமயக்கத்தாலேயே இங்கு 70 ஆண்டுகள் திடமாகச் செயல் புரிந்த நினைவு உண்டாகிறது. இது கனவில், சிறிது நேரத்தில் நெடுங்காலம் கடப்பதைப் போன்றது. இதுவே மகா மயக்கம் எனப்படுவது. உயிரானது பழைய வாழ்வை மறந்து, வேறொரு புதிய பாவனையை எய்தும். அப்போது, புதிய வாழ்க்கை, உறவினர் என அனைத்தையும் அது காணும்."

தன் முற்பிறப்பு இடத்தைக் காண லீலை விரும்பினாள். பருவுடல் விட்டு (துளை மட்டுமாகி), அதன் நிழல்போல ஆகுவதற்கான வழிமுறை அவளுக்குக் கூறப்பட்டது. அவ்வாறே மாறிய லீலையும் தேவியும் வான் வழியாகப் பயணித்தனர். இருவரும், வழியில் பூதங்கள், அரக்கர்கள், அலகைகள், விலங்கு முகத்தோடு மனித உடலுடைய யோகினிகள், மகிழ்ச்சியோடு நடனமாடுவோர், யாழ் இசைப்போர், காரிருள் அடர் பகுதிகள் அனைத்து உயிர்களும் வாழும் மூவுலகுகள், மிகுந்த ஒளி பொருந்திய பகுதிகள் எனப் பலவற்றையும் விரைவில் கடந்து ஞான வானத்து, மற்றோர் உலகில் மறையவனின் வீடு சென்றடைந்தனர். அங்கே மறையவனும் அருந்ததியும் இறந்த துயர் நீங்காத மகன்கள் மற்றும் உறவினர்களைக் கண்டனர். "வீட்டிலுள்ளோர் எம்மைக் காண்க" என லீலை எண்ணியவுடன் (சங்கற்பம்), வீட்டினர் இவ்விரு தேவியரையும் கண்டு வணங்கினர். அவர்களது துயர் நீங்கிற்று. "உலகம் பிரம்ம வடிவாதல் இவ்வாறாகும்" எனத் தேவி, லீலையிடம் கூறினாள்.

பின்னர், இரு தேவியரும், அவ்விடம் விட்டு நீங்கிப் பயணம் தொடர்ந்தனர். லீலை, தனது முற்பிறப்புக்களை உணர்ந்தாள். தான்

பிரம்மத்தை விட்டுப் பிரிந்து, அந்தக் கரணமும் முக்குணங்களும் பெற்று, வெவ்வேறு கோள்களில், அண்டங்களில் பல்வேறு பிறப்புக்கள் அடைந்ததையும், கடலில் துரும்பென அலைவுற்று, பின்னர் தேவியின் அருளால் காப்பாற்றப்பட்டதையும் தேவியிடம் கூறினாள். மிகுந்த தொலைவு பயணித்து இருவரும் பதுமனின் மாயா மண்டபம் அடைந்து அவன் உடலைக் கண்டனர். மறுபடியும் பயணித்து விதூரதனின் நாடு சென்றனர். அங்கு 70 வயது முதிய விதூரதன், ஓர் பகை மன்னனுடன் போர் செய்த களைப்பில் உறங்குவதைக் கண்டனர்.

தேவியர் வரவால் உறக்கம் நீங்கிய மன்னவன், அவர்களை வணங்கினான். அவனது அமைச்சன் விதூரதனது குலபரம்பரை கூறினான். அது மனுகுலத்தைச் சேர்ந்த மன்னர் மன்னன் கும்பரதன் தொடங்கி, பல அரசர்களின் வரிசைப்பாடாக இருந்தது. சரசுவதி தேவியும் உன் முற்பிறவிகளை அறிவாயாக எனக் கூறி அவன் முடிதொட்டு அருளினாள். விதூரதன் தான் முன்னர் பதுமனாக அரசு புரிந்ததையும், அப்போது தன் மனைவியான லீலை, தற்போது எதிரில் நிற்பதையும் உணர்ந்து,

**"போயபவத் துடனீங்கி நாளொன்றாம் இவ்வுடலில் புக்கபின்னைச் சேயஎழுபது வருடம் சென்றதால் செய்ததெலாம் தெளியாநின்றேன்"**

என வியந்தான். தொலைவு, இடம், காலம் பற்றிய உண்மைகளைச் சரசுவதி தேவி, விதூரதனுக்கு உபதேசித்தார் (இது தத்துவப்பகுதி) எதிரே நிற்கும் லீலையின் பொருட்டாகவே, தான் உண்மை உணர்வும், பழைய வடிவ நினைவும் பெற்றதை உணர்ந்து கொண்ட விதூரதன், "நான் பதுமனாக மாறுவேனா" எனக் கேட்டான். அதற்குச் சரசுவதிதேவி, "இப்போரில் நீ இறப்புற்றுப் பதும அரசனாக ஆவாய்" எனக் கூறினாள்.

அப்போது, ஒரு பணியாள் வந்து பகை அரசன் முன்னேறுவதையும், பகைப் படையினர் செய்யும் அழிவுகளையும் பற்றிக் கூறினான். பட்டினம் பாழானதை அனைவரும் கண்டனர்.

அப்போது, விதூரதனின் மனைவியான லீலை (.... விதூரத லீலை) அங்குவர, அவள் தன் சாயலில் உள்ளமை கண்டு பதும லீலை

வியந்தாள். விதூரதன் இப்புதிய லீலையைத் தேவியார் பாதுகாப்பில் விட்டுப் போருக்குச் சென்றான். புதிய லீலையும் சரசுவதி தேவியை வணங்கி, "நான் இடைவிடா வழிபாடு (உபாசனை) செய்து, தேவி தாங்களே என உணர்கிறேன். என் கணவர் இறந்தால், அவர் செல்லுமிடத்து நான் இதே பருவுடலுடன் சென்று, அவரோடு வாழ அருள வேண்டும்," என வேண்டி வரம் பெற்றாள்.

விதூரதன், போரில் வீரமரணமடைந்தான். புதிய லீலை தேவியை வணங்கி, அவள் அருளால் மெல்லிய உடல் பெற்று வான் வழியாகப் பதுமனின் அரண்மனையிலுள்ள மாயா மண்டபத்தைச் சேர்ந்து பருவுடல் பெற்றாள். இறப்புற்ற விதூரதனின் உயிர் உயரே பயணிக்க, அதனுடன் இரு தேவியரும் பயணித்துப் பதும மண்டபம் சேர்ந்தனர். அங்கே, சமாதி நிலையில் இரு பதும லீலையின் உடல், இறந்ததாகக் கருதப்பட்டு, அமைச்சர்களால் எரியூட்டப்பட்டிருந்தது. (ஆதலால், பதும லீலைக்கு இனிமேல் நுண்ணுடல் (சூட்சும சரீரம்) மட்டுமே உண்டு.)

சரசுவதி தேவியும், பதுமனின் உயிர்த்தடை நீங்கவும், விதூரத லீலை, பருவுடலுடன் தங்களைக் காணலாமெனவும் எண்ணினாள். அவை அவ்வாறே நடந்தேறின.

உறக்கம் விட்டது போல் எழுந்த பதுமன் சரசுவதி தேவியை வணங்கினான். இரண்டு லீலைகள் எவ்வாறு என வினவினான். தேவியின் விளக்கமும், முழுமையான அருளும் பெற்ற இது,

**"புகழுஞ் செல்வமும் பெருகவையகம் பொலிக தீதெலாம்**
**போகவேஎது,**
**நிகழுமேன்மையோர் நிறைக நீடெனா நிமலவாணிதன்**
**நிலையமேயினாள்"**

எனப் பட்டுள்ளது.

சரசுவதி தேவி அவ்விடம் விட்டு மறைய, மூவரும் அவளை எப்போதும் நினைந்து, பல்லாண்டுக் காலம் சீவமுத்தராக வாழ்ந்து, பின்னர், உடல் விட்டு நற்பேறடைந்தனர்.

----------- கதைக்கான 'தத்துவப் பகுதி', அடுத்த இதழில் தொடரும்.

## கோயிலூர்ப் புராணம் (தொடர்ச்சி)

ஆனநல் அறம்சால் சீவகா ருணியம்
அமைதரு பரசிவ பத்தி
பாநலம் பலவும் பாங்(கு)உறக் கொடுக்கும்
பாசவை ராக்கியம் பிரம
ஞானம்என்(று) உரைக்கும் இவைஒரு நான்கு
நன்(கு)உடை அவர்இவர் புகழ்க்கு
மானம்இன்(று) உரைத்தற்(கு) அநந்தனும் வல்லான்
அல்லன்மற்(று) உரைப்பவர் யாரே 17

தவவலி படைத்த சௌனகன் சாதா
தபன்வசிட் டன்துரு வாசன்
இவர்புகழ் விசுவா மித்திரன் ககோளன்
இல(கு)உறு மாணிமாண் டவியன்
துவர்படு சடில மாதவன் பிருகு
தூமிரன் காத்தியா யனனே
குவலயம் புகழும் காசிபன் வீதி
கோத்திரன் சாலி கோத்திரனே. 18

மருவிய வாபத் தம்பன்பாற் கரியன்
வாமதே வன்கவுத மன்தோம்
ஒருவிய போதா யனன்மவுற் கலனே
உரூருகாற் கியன்கவுத் தகிசீர்
இருவிய புலகன் அத்திரி சம்பு
விரசினி யாக்கிய வற்கன்
வெருவிய செயல்தீர் சத்தியா சாடன்
மேதகு சதாநந்த முனிவன் 19

புலத்தியன் சாக லியன்முதல் முனிவர்
புகழ்மிகு அளவிலர் கூடி
நலத்(து)இயல் ஆண்டு பன்னிரண் டளவு
நவிற்றும்ஓர் மாமகம் தொடங்கி
வலத்(து)இயல் விதியால் புரிதரும் போது
மாமறை யாகம புராண
நிலத்(து)இயல் மற்றை யாவையும் உணர்ந்தோன்
இறைகெழும் அருந்தவப் பெரியோன் 20

தவல்அரும் கொடிய ஐம்புலக் குறும்பு
சாய்த்தவன் தவத்தருள் சிறந்தோன்
நுவல்அரும் பெருமை வெண்திரு நீறு
நோன்மைசால் கண்டிகைத் தொடையும்
கவல்அரும் களிப்பில் புனைந்தவன் தவாது
கருதும்ஐந்(து) எழுத்தும்உள் கணிப்போன்
இவலரும் புகழ்அன் றியும்தனை அடுத்தோர்
யாரையும் தான்எனச் செய்வோன் 21

சத்திய ஞானா நந்தநிட் களமாய்த்
தற்பர சொரூபமாய் விபுவாய்
நித்திய நிமல நிரஞ்சன முதலாய்
நிறைதரு பேரொளிப் பிழம்பாய்
மெத்திய உயிரின்அ பேதமாய் என்றும்
விளங்கிடும் ஒருபர சிவமே
பொத்திய தான்என்(று) உணர்தரு துணிபோன்
புகழ்மிகு சூதமா முனிவன் 22

பலகலை ஐயம் திரி(பு)அறி யாமை
பறித்துநன்(கு) உணர்ந்தவர் ஆயும்
அலகலை குணத்தின் அமைந்தவ் ராயும்
அமைந்தமா ணாக்கரும் அவர்க்கு
விலகலை உறாது சூழுமா ணவரும்
மெய்ந்நிழ லேஎனத் தொடர
விலகலை அடைந்து யாரும்உள் மகிழ்வுற்(று)
இன்பமீக் கூர்தர வந்தான் 23

வந்தமா தவனை இருந்தமா தவர்கள்
வரஉவந்(து) இருக்கைநின்(று) எழுந்து
சந்தம்ஆர் எதிர்சென்(று) அடிமிசைப் பணிந்து
தடங்கரம் கூப்பினர் கொடுவந்(து)
அந்தம்இல் சிறப்பின் ஆதனத்(து) இருத்தி
அருக்கிய பாத்தியா சமனம்
முந்தஆ தரித்துக் கொடுத்தனர் பூசை
முடித்தனர் இருக்கஎன இருந்தார். 24




பவத்துயர் விளைக்கும் ஐம்புலக் குறும்பு
பாழ்படுத்(து) எழுந்துமேல் ஆய
தவத்(து)உயர் கருணைக் குன்றமே சகல
சாத்திர புராணம்முற்(று) உணர்ந்து
சிவத்(து)உயர் நெறியே நெறிஎனத் தெளிந்து
தெளிதரா எம்மனோர் முழு(து)உய்ந்(து)
அவத்துயர் கடப்பத் தெளிக்கும்ஆ ரியனே
அமலனே எனப்பல துதித்தார். 25

வண்மைசால் கருணைச் சூதமா தவநின்
வதனசெந் தாமரை மலர்நின்(று)
உண்மைசால் புராண கதைஎனும் நறவம்
ஊற்றுஎழூஉ வழிதரும் அதனை
அண்மைசால் செவிஎன்(று) உரைத்திடும் வாயால்
அலாவுபு பருகியும் இன்னும்
வெண்மைசால் அறிவேம் ஆதலில் திருத்தி
மேவிலேம் பருகுதல் வேட்டேம் 26

கண்ணிய தவத்தோர் இதயஆ லயத்தில்
கழல்தராச் சிவபிரான் உருவாய்த்
திண்ணிய விமல மால்வரை தொடங்கிச்
சேதுமா தலத்தளவு உள்ள
புண்ணிய தலங்கள் புண்ணிய தீர்த்தம்
யாவையும் புகர்அறுத்(து) எமக்கு
நண்ணிய அருளால் தெரித்தனை கேட்டு
நாங்கள்நன்(கு) உணர்ந்தனம் அவற்றுள் 27

காழ்அகில் துணியும் சந்தனக் குறடும்
கைஅரிக் கொண்(டு)எடுத்(து) எறியா
ஆழ்கடற் கிடங்கு கிழிதரப் பாயும்
அகன்புனல் காவிரிக் கரையில்
வாழ்பிற இடத்தில் எண்ணிய(து) அளிக்க
வல்லமா யூரமே முதலா
ஏழ்பெரும் புவனம் இறைஞ்சுபல் தலங்கள்
இருப்பஎன் றனைஅவற் றுள்ளும் 28

சத்திய ஞானா நந்தமா முதல்வாழ்
தருதிரு வானைக்கா என்னும்
சத்திய தலத்துக்(கு) ஐந்(து)யோ சனையாம்
தக்கிணத் தலர்பல துதைந்த
சத்திய தடம்சேர் மெய்யம்என்(று) ஒருபேர்
தவா(து)அடைந்(து) அரிதொழ அமரும்
சத்திய கிரிக்(கு)ஓர் யோசனை அளவில்
சாற்றிடும் தக்கிண திசையில் 29

புகழ்மிகு கண்ட தேவிஎன்(று) உரைக்கும்
பொன்மழை பொழிந்தவர் தலத்திற்(கு)
இகழ்(வு)இல்உத் தரத்தில் யோசனை அரையில்
எண்ணினோர்க்(கு) எழுபவத் துயரும்
அகழ்பெருந் துறைக்கு மேல்திசை ஒன்றோ(டு)
அரைபுணர் யோசனை அளவில்
திகழ்செய்புத் தூர்க்குக் கதிரவன் உதிக்கும்
திசைமுக் கால்யோசனை அளவில் 30

இருப்பது கழனி வாயில்என்(று) எவரும்
எடுத்(து)உரை செய்யும்ஓர் தானம்
விருப்பம்ஆர் சாலி வாடியே என்றும்
மிளிர்தரு சமிஎனம் என்றும்
மருப்(பு)உறு புகழ்ச்சீ வல்லபம் என்றும்
மறைதரு பெயர்பல பூண்ட(து)
ஒருப்படு மனம்இல் லவர்தொழற்(கு) அரி(து)என்(று)
உரைத்தனை ஐயநீ முன்னர் 31

அன்னமா தலத்தின் மான்மியம் முழுதும்
அறிதரும் ஆர்வமிக்(கு) உடையோம்
நன்னர்நீ இன்னே நவிற்றிடல் வேண்டும்
நவில்ஒணாக் குணப்பெருங் குன்றே
பன்னரும் புகழ்சால் அருட்பெருங் கடலே
என்றனர் பரவுத லோடும்
உன்னரு மகிழ்ச்சி தலைக்கொளச் சூத
மாதவன் ஒண்முகம் மலர்ந்து 32

*தொடரும்...*

# மடாலய நிகழ்வுகள்

19.9.2014 அன்று நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி சார்பில் கல்லூரிகளுக்கு இடையிலான InterCollegiate Technical Events நடத்தப் பெற்றது. கணினி இயல்துறைத் தலைவர் திருமதி கலா மற்றும் துறைப் பேராசிரியர்கள் இந்த நிகழ்வினை ஏற்பாடு செய்திருந்தனர். 10 கல்லூரிகள் கலந்துகொண்ட Intellect'14 என்ற இந்த நிகழ்வில் டாக்டர் திருமதி உமையாள் இராமநாதன் கல்லூரி வெற்றி பெற்றது.

27.9.2014 அன்று ஸ்ரீமத் இராமனாத ஞானதேசிகர் (10. ஆவதுபட்டம்) குருபூசை நடைபெற்றது.

1.10.2014 அன்று நாச்சியப்ப சுவாமிகள் குருபூசை நடைபெற்றது. நாதஸ்வரக் கல்லூரி முன்னாள் மாணவர்கள் இன்னிசையுடன் நடைபெற்ற விழாவில் அறங்காவலர்களும், நகரின் முக்கிய மான பிரமுகர்களும் கலந்து கொண்டனர். கோவிலூர் சனாதன தர்ம உலகப்பல்கலைக் கழக அறநிலைக் கல்வி நிறுவனங்களைச் சார்ந்த முதல்வர்கள், ஆசிரியர்கள், அலுவலர்கள், மாணவர்கள் அனைவரும் கலந்து கொண்டு குருவருளும் திருவருளும் பெற்றுப் பயனடைந்தனர்.

6.10.2014 அன்று நாச்சியப்ப சுவாமிகள் கலைஅறிவியல் கல்லூரியால் ஏற்பாடு செய்யப்பெற்ற அழகப்பா பல்கலைக்கழகக் கல்லூரிகளுக்கிடையேயான பெண்களுக்கான கபடிப் போட்டி நடைபெற்றது. அழகப்பா பல்கலைக் கழக உடற்பயிற்சிக் கல்லூரி வெற்றிபெற்றது. பூவந்தி MSN கல்லூரி இரண்டாம் இடம் பெற்றது.

8.10.2014 அன்று நாச்சியப்ப சுவாமிகள் கலைஅறிவியல் கல்லூரி சார்பில் கல்லூரிகளுக்கான காட்சி தகவல் இயல்துறைக் கருத்தரங்கம் நடைபெற்றது. திரைப்படத் துறையில் மிகவும் புகழ்பெற்ற திரு B. லெனின், திரு B. கண்ணன், திரு சீனிவாச சந்தானம், திரு PSAV. பிரசாத், திரு ஹரிகிருஷ்ணன் ஆகியோர் கலந்து கொண்டனர். பல்வேறு கல்லூரிகளிலிருந்து மாணவர்கள் வருகைதந்து பங்குகொண்டு பயன்பெற்றனர்.

18.10.2014 அன்று நிறுவனர் நாள்விழா நடைபெற்றது. முற்பகல் மங்கல இன்னிசையோடு தொடங்கிய விழாவில் திரு R. நடராஜ் IPS (முன்னாள் TNPSC தலைவர்) சிறப்புரையாற்றினார். சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் முன்னிலை வகித்து ஆசியுரை வழங்கினார்கள். அழகப்பா பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் பொறுப்புக்குழுத் தலைவர் முனைவர் S. கலியமூர்த்தி தலைமையுரை நிகழ்த்தினார். நாச்சியப்பசுவாமிகள் கலைஅறிவியல் கல்லூரி முதல்வர் முனைவர் சே. குமரப்பன் அனைவரையும் வரவேற்றார். கோவிலூர் ஆண்டவர் மெட்ரிகுலேசன் மேனிலைப் பள்ளியின் முதல்வர் திருமதி மணிமொழிமோகன் நன்றி கூறினார். நிறுவனர் நாள்விழாவை ஒட்டி நடத்தப்பெற்ற பல்வேறு போட்டிகளில் வெற்றிபெற்றவர்களுக்குப் பரிசுகள் வழங்கப்பெற்றன.

மாலை 5.00 மணி அளவில் நிறுவனர் நாள் விழாவின் நிறைவு விழா நடைபெற்றது. தமிழகத்தின் புகழ்பெற்ற எழுத்தாளர் எஸ். இராமகிருஷ்ணன் மற்றும் சென்னை வானொலி நிலையத்தின் நிகழ்ச்சி ஒருங்கிணைப்பாளர் முனைவர் சுந்தர ஆவுடையப்பன் ஆகியோர் விழாவில் கலந்து கொண்டு சிறப்புரை ஆற்றினர்.

காப்பியக் கவிஞர் நா. மீனவன் எழுதிய மாதவ மேகலை, மற்றும் கோவிலூர் நன்னெறி அறநிலையின் வெளியீடுகளான ஏழிளந்தமிழ், மாணவர்களுக்கான திருக்குறள் ஆகிய நூல்களைச் சீர்வளர்சீர் மெய்யப்ப ஞானதேசிக சுவாமிகள் வெளியிட்டார்கள்.

முனைவர் கரு. முத்தையா நூல்களை அறிமுகம் செய்து வைத்தார். பேராசிரியர் ம. கார்மேகம் அனைவரையும் வரவேற்றார். நிகழ்ச்சியின் நிறைவாக ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஆண்டவர் மழலையர் மற்றும் தொடக்கப்பள்ளியின் தலைமை ஆசிரியை திருமதி லெ. மணிமொழி நன்றி கூறினார். நிறைவு நிகழ்ச்சியாகச் சனாதன தர்ம உலகப் பல்கலைக்கழகக் கல்வி நிறுவனங்களின் மாணவர்கள் பங்கேற்ற கலை நிகழ்ச்சி நடைபெற்றது.

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**